# திருநெடுங்களக் கோயில்

## வ ர லா று





தேவஸ்தான வெளியீடு

1944

உ

# திருநெடுங்களக் கோயில் வரலாறு

திரிசிரபுரம் ஹீபர் ஹைஸ்கூல் தமிழ் ஆசிரியர்
**திரு. R. பஞ்சநதம் பிள்ளை அவர்களால்**
எழுதப்பெற்று

திருநெடுங்களம் தேவஸ்தானம் தர்மகர்த்தர்கள்
திரு. K. சிவசாமி உடையார் அவர்கள்
திரு. P. V. சோக்கலிங்கம் பிள்ளை அவர்கள்
ஆகியவர்களால் வெளியிடப்பெற்றது.




**சாது அச்சுக்கூடம்,**
இராயப்பேட்டை, சென்னை
1944

 [விலை 2 அணா

# முகவுரை

இறைவனை வழிபடுதற்குரிய இடங்கள் ஆன்றோர்கள் அமைத்த ஆலயங்களேயாகும். தமிழ் நாட்டில் அத்தகைய ஆலயங்கள் பல உண்டு. அவைகளில் திருநெடுங்களம் என்பது ஒன்று. இத்தலத்திற்கு வடமொழியில் ஒரு புராணம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. கோயிலுக்குச் செல்வோர் முதலில் கோயிலின் பெருமையையும், பிற செய்திகளையும் அறிந்துகொள்வது நலமாகும். சென்னை இந்துமத தர்ம பரிபாலன பாதுகாப்புப் போர்டார் அனுப்பிய அறிக்கையின்படி இவ்வரலாறு எழுதப்பெற்றது. இவ் விஷயத்தில் கமிஷனர் ராவ்பகதூர் - திரு. C. M. இராமச் சந்திரஞ் செட்டியார், B. A., B. L. அவர்கள் மிகவும் ஊக்கஞ் செலுத்தி வருகின்றார்கள். தமிழ் ஆசிரியர் திரு. R. பஞ்சநதம் பிள்ளை அவர்களால் இது எழுதப்பெற்றுக் கமிஷனர் அவர்களால் பார்வையிடப்பெற்றது. இத்தலத்தைப்பற்றிய துதிப் பாடல்கள் பின்னே சேர்க்கப்பெற்றுள்ளன. அன்பர்கள் படித்து இறைவன் திருவருளைப்பெறுக.

திருநெடுங்களம்
தேவஸ்தானம்
7-1-44

P. V. சொக்கலிங்கம் பிள்ளை,
தர்மகர்த்தர்.

# உள்ளுறை

# திருநெடுங்களக் கோயில் வரலாறு

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே என்றுனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றம்ஓராய் கொள்கையினால் உயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.

## 1. கோயிலும், இருப்பிடமும்

ஆதியும், அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி யாகிய இறைவன் உலகத்தில் உள்ள உயிர்கள் துன்பம் நீங்கி இன்பம் பெற்றுய்யும் வண்ணம் அவ்வுயிர்கள் மேல் வைத்துள்ள பெருங் கருணையால் தனது யாவுங் கடந்த நிலையை மாற்றி இம்மண்ணுலகத்தில் ஆங்காங் குள்ள பல இடங்களில் உருவத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து பக்குவப்பட்ட உயிர்களுக்கு அருள் செய்து வருகின்றான். இத்தகைய சீரிய இடங்களே ஆலயங்கள் ஆகும்.

தமிழ் நாட்டில் அத்தகைய சிவாலயங்கள் 274 உள்ளன. அவற்றுள் என்றும் வற்றாத புதுப் புனலை யுடைய பொன்னி நதி பாயும் புனல் நாடாகிய சோழ நாட்டில் காவிரிக்குத் தென் கரையில் உள்ள பல தலங் களில் களம் என்ற முடிபைக் கொண்ட தலங்களில் திருவேட்களம், திருவஞ்சைக்களம் முதலிய தலங் களைப் போன்று திருநெடுங்களம் என்னும் பழமையான தலம் ஒன்று உண்டு. இது திருச்சிராப்பள்ளி ஜில்லா, திருச்சி தாலூகாவில் திருவெறும்பூருக்குக் கிழக்கே 8 மைலில் உள்ளது. திருச்சியிலிருந்து மோட்டார் மூலமா யும், திருச்சி - தஞ்சை ரயில்வே ஸ்டேஷனுக்கு நடுவில் உள்ள சோழகன்பட்டி, தொண்டைமான்பட்டி ரயில்வே ஸ்டேஷன்களிலிருந்து தெற்கே குறுக்கு வழியாக $2\frac{1}{2}$ மைல் நடந்து சென்றும் இவ்விடத்தை அடையலாம். இவ்வூரில் போர்டு எலிமெண்டரி பள்ளிக்கூடம் ஒன்று

†

உள்ளது. சுமார் 100 விடுகள் இருக்கின்றன. ஜனத் தொகை சுமார் 500 இருக்கலாம். இத்தலம் திருநட்டான் குளம் என்றும், திருநெடுங்குளம் என்றும் வழங்கப்படுகின்றது. பெரிய நெற்களத்தைக் கொண்டிருப்பதால் நெடுங்களமென்றும், ஊருக்குப் பக்கத்தில் பெரிய குளம் அமைந்திருப்பதால் நெடுங்குளம் என்றும் சொல்லப்படுகிறது. கல்வெட்டுக்களில் இவ்வூர் தியாகவல்லி சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்படுகிறது.

## 2. கோயிலின் அமைப்பு

இத்தலம் வயல்களுக்கு நடுவில் அமைந்துள்ளது. சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கியும், அம்மன் சந்நிதி தெற்கு நோக்கியும் உள்ளன. கோயிலின் உள்ளிருந்து வெளி வரையில் மூன்று பிரகாரங்கள் உள்ளன. முன்னே இடிந்த வாயிலும், அதை அடுத்துச் சிறிய கோபுரத்தையுடைய வாயிலும் உள்ளன. முதல் பிரகாரத்தைச் சுற்றிலும் தொடர்ந்துள்ள சுற்றுமண்டபம் அமைந்து உள்ளது. அதில் தென் வரிசையில் ஸ்தல அடியார்கள், நாககன்னிகைகளின் விக்கிரகங்களும், மேற்கு வரிசையில் விநாயகர், முருகப்பெருமான், வரத ராஜப் பெருமாள் சந்நிதிகளும், வடக்கில் அகஸ்தியர் கோயிலும் இருக்கின்றன. விமான மண்டபத்தைச் சுற்றிலும் தண்ணீர் நிறைந்துள்ளது. 2-ம் பிரகாரத்தில் வசந்த மண்டபமும், அம்மன் கோயிலும், நந்தவனமும் உள்ளன. இந்தப் பிரகாரத்தில் சுற்றிலும் தென்னை முதலிய மரங்கள் நிறைந்துள்ளன. கோயிலின் சுற்றளவு, வெளி மதிலின்படி கிழமேலில் சுமார் 455 அடி. தென் வடலில் சுமார் 235 அடி. 3-ம் பிரகாரமாகிய வெளி வீதியில் தேரோட்டம் நிகழும். கோயிலுக்கு எதிரில் கீழ்பாகத்தில் மிகப் பழமையான தேர் ஒன்று இருக்கிறது. தல விருக்ஷம் கஸ்தூரி அரளி. இதில் வெண்மையும் சிவப்பும் கலந்த மலர்கள் மலரும். இவைகளை விளக்கமாகத் தெரிவிக்கும் படம் ஒன்று இதனுடன் சேர்க்கப் பெற்றுள்ளது.

## 3. கோயிலின் அமைப்பைக் காட்டும் படம்

(மேற்குத் தெரு) தென் வடல் மதில் சுமார் 235 அடி



படத்தில் உள்ள எண்களின் விளக்கங்கள் :—

1. மூலஸ்தானம்
2. அம்மன் கோயில்
3. விநாயகர் கோயில்
4. சுப்பிரமணியர் கோயில்
5. பெருமாள் சந்நிதி
6. அகஸ்தீஸ்வரர் கோயில்
7. அகத்திய தீர்த்தம்
8. நந்தி
9. உற்சவ மண்டபம்
10. நந்தவனம்
11. கறுப்பன் கோயில்
12. விநாயகர்
13. தேர் நிலை
14. குளம்
15. கோபுர வாயில்
16. முன் வாயில்

## 4. மூர்த்திகளின் பெயர்கள்

இக்கோயிலின் மூல மூர்த்திக்கு நெடுங்களநாதர், நித்திய சுந்தரர், மகாதேவர், காவணேசுவரர், சபாநாயகர், நெடுங்கள்ளன் என்னும் திருநாமங்கள் வழங்கப்படுகின்றன. சபாநாயகர் என்ற பெயரைத் தஞ்சை அரசர்கள் சூட்டிக்கொள்ளும் வழக்கம் உண்டென்று கூறப்படுகின்றது. நெடுங்கள்ளன் என்ற பெயர் பற்றி ஒரு கதை வழங்கப்படுகிறது. கல்வெட்டுக்களில் மூர்த்தியின் பெயர்கள் திருநெடுங்களமுடைய தம்பிரானார் என்றும், நிலத்தார் சோலைவனமுடைய நாயனார் என்றும், கைலாயத்து மகாதேவர் என்றும், குழந்தை நாயகர் என்றும் வழங்கப்படுகின்றன. அம்மனுக்கு ஒப்பிலாநாயகி, மங்களாம்பிகை என்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன. பெருமாள், வரதராஜப் பெருமாள் என்று அழைக்கப்பெறுவர். இக்கோயிலில் பெருமாள் சந்நிதி ஏற்பட்ட காரணம் தெரியவில்லை. தஞ்சை அரசர்கள் காலத்தில் அமையப் பெற்றிருக்கலாம் எனத் தெரிகிறது.

## 5. தீர்த்தங்கள்

*1. அகஸ்திய தீர்த்தம். இது முதல் பிரகாரத்தில் அகஸ்தியர் கோயிலுக்கு எதிரிலுள்ள கிணறு. இத் தலத்தைத் தரிசனம் செய்யவந்த அகஸ்தியர் தம் கட்டை விரலை ஊன்றி இத்தீர்த்தத்தை உண்டாக்கிய தாகச் சொல்லப்படுகின்றது. இதில் நீர் பூமிமட்டத்திற்கு நிறைந்துள்ளது.*

*2. சூரிய தீர்த்தம். இது கோயிலுக்கு எதிரில் தேர்நிலைக்குப் பக்கத்தில் உள்ளது.*

*3. தீர்த்த நாயகம். கோயிலுக்கு மேல்புறத்தில் உள்ள குளம் ஆகும். பஞ்ச மூர்த்திகளும் புறப்பட்டுச் சென்று இவ்விடத்தில் தீர்த்தங் கொடுக்கும்.*

## 6. தலப் பேருமைகள்

*நால்வகை நிலங்களில் மருதநிலப் பகுதியைச் சேர்ந் தது. பல்வளங்கட்குக் காரணமான நெல்வளம் மிக்க நன்செய் நிலங்கள் கோயிலைச் சுற்றிலும் உள்ளன. சோழ மன்னர் காலத்தில் இவ்விடம் பெரிய நெற்கள மாய் இருந்து அப்பெயரே கோயிலுக்கும் ஊருக்கும் அமைந்துள்ளதாகத் தெரிகிறது. மூர்த்தி, தலம், தீர்த் தம் என்ற மூன்று பெருமைகளைக் கொண்டது. வங்கிய சோழன் பூசித்துப் பேறுபெற்ற பெருமையுடையது. மூலமூர்த்தி சுயம்புமூர்த்தி. ஒருகாலத்தில் விண்ணுற்றி லிருந்து அபிஷேகத்திற்கு நீர் கொண்டுவரப்பெற்றது. கொர்ப்பக்கிரகத்தைச் சுற்றிலும் நீர் ஊற்றம் உடையது. கோயிலும் நந்தவனமும் சோழனுல் திருப்பணி செய்யப் பெற்றவை. நிறைந்த கல்வெட்டுச் செய்திகளையுடையது. பற்பல அரசர்கள் காலத்தில் இத்தலம் சீரும் சிறப்பும்*

பெற்றுத் தேவதானமாகத் திகழ்ந்து வந்ததாகத் தெரிய வருகிறது. இரு வேறு நிறங்கொண்ட மலர்களையுடைய அரளி விருட்சத்தையுடையது. இக்கோயிலில் சுவாமி சந்நிதிக்கு எதிரில் வெண்கல நந்தியும், சுற்றுப் பிரகாரத்தில் வெண்கலக் குதிரையும் உள்ளன. கோயிலுக்கு வருபவர் இக்குதிரையைத் தூக்கிப் பார்த்துத் தங்கள் உடல் வலிமையைச் சோதிப்பது வழக்கம். தக்ஷிண மூர்த்தி யோக நிலையில் அமர்ந்து யோக மூர்த்தியாய் விளங்குகிறார். சோமாஸ்கந்த மூர்த்திக்குக் கட்டை விரல் ஊனமாயுள்ளது. இதைப்பற்றி ஓர் வரலாறு சொல்லப்படுகின்றது. விநாயகரின் துதிக்கை வலஞ் சுழியாக உள்ளது. கோயிலுக்குள் ஓர் சுரங்கம் உள்ளது. இது தஞ்சை வரையிலும் செல்வதாகச் சொல்லப்படுகின்றது. இத்தலத்துப் பெருமானைத் திருஞானசம்பந்தர் பக்தி மிகுந்த பாடல்களால் போற்றியுள்ளார்.

## 7. வழிபட்டோர்

இத்தலத்துப் பெருமானைச் சூரியன், நாக கன்னிகைகள், அகத்தியர், வங்கிய சோழன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். அகத்தியர் வழிபட்டதற்கு அகத்திய தீர்த்தம் உள்ளது. திருஞானசம்பந்தர், அருணகிரியார், ஐயடிகள் காடவர்கோன் முதலியோரும் பெருமானைத் துதித்துப் பாடல்கள் இயற்றியுள்ளார்கள். இவைகள் பின்னே சேர்க்கப்பட்டுள்ளன.

## 8. சுற்றுக் கோயில்

கோயிலுக்கு வெளியே கீழ் பாகத்தில் கறுப்பன் கோயில் ஒன்று உள்ளது. இது காவல் கடவுளாகக் கருதப்படுகிறது. முதலில் இதற்குத் திருவிழாச் செய்த பிறகே கோயிலுக்கு விழா நடத்துவார்கள்.

## 9. திருப்பணிகள்

பல ஆண்டுகளுக்கு முன் கோயிலில் சில திருப் பணிகள் செய்யப்பட்டு அக்ஷய ஆண்டு ஆவணிமீ 11உ (27-8-1926) வெள்ளிக்கிழமை கும்பாபிஷேகம் நடை பெற்றது. கோயில் தற்போது திருப்பணி செய்யப்பட வேண்டிய நிலையில் உள்ளது. மதில்களும், மண்டபங் களும் பழுதடைந்துள்ளன. 'புதிதுறப் பணிகள் வேறு புரிவதிற் பழையதொன்றை விதியுளி புதுக்குவோர்க்கு மிக்க புண்ணியம் எய்தும்' என்றவாறு புதியதோர் ஆல யத்தை அமைப்பதைப் பார்க்கிலும் மிகப் பழமையான இக்கோயிலைத் திருப்பணிசெய்து புதுப்பித்தல் சீரிய அறமாகும். அன்பர்கள் இத்தொண்டில் கலந்துகொண்டு வேண்டுவன செய்து உதவி புரிவார்களாக.

## 10. சிற்பச் சிறப்புகள்

இக்கோயிலின் கெர்ப்பக் கிரகத்தின் உட்பக்கம் 8 பட்டைகளாக அமைக்கப்பட்டுள்ளது. கெர்ப்பக் கிர கத்துக்கும், அர்த்த மண்டபத்துக்கும் சேர்ந்து மேலே இரட்டை விமானங்கள் உள்ளன. உள்ளே ஒரு சுரங்கம் உள்ளது. துவாரபாலகர்களின் விக்கிரகங்கள் மலர்ந்த முகத்துடன் விளங்குகின்றன. சிரிப்புக்கு அடையாள மாகப் பற்கள் தெரியும்படியாக அமைந்துள்ளன். இவை கள் இத்தலத்துக்குப் புதுமையாய் விளங்குகின்றன.

## 11. கல்வேட்டுக்கள்

இக்கோயிலில் மிகுதியான கல்வெட்டுக்கள் உள் ளன. 1909-ம்ஆண்டில் 664 எண் முதல் 697 வரையில் சர்க்காரால் நகல் எடுக்கப்பட்டு வெளியிடப்பட்டிருக் கின்றன. விஜய நகரத்து அரசர்களான இம்மடித்தம்

மய்ய தேவர், விருப்பண்ண உடையார், மல்லிகார்ச்சுன ராயர், வீரநாராயண உடையார், ஆகிய இவர்கள் காலத்திலும், திரிபுவன சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன் II காலத்திலும், ஹொய்சல மன்னனுன வீரராமநாத தேவன் காலத்திலும், சோழ மன்னர்களான திரிபுவனச் சக்கரவர்த்தி, திரிபுவன தேவன், கரிகால் சோழன், விஜயாலய சோழன், முதலாம் ராஜராஜதேவன், 3-ம் ராஜராஜதேவன், பராந்தகன் ஆகிய இவர்கள் காலத்திலும், விஜயரங்கசொக்கநாத நாயக்கர் காலத்திலும் ஏற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. இவர்கள் காலத்தில் கோயிலின் பூஜை முதலியவைகளுக்குப் பணமும், நிலங்களும், நெல்லும் பொன்னும், ஆடுகளும், பசுக்களும், நெய்யும் அரசர்கள் முதல் குடிகள் வரையிலுள்ள பலதிறப்பட்ட மக்களால் கொடுக்கப்பட் டிருந்தனவாகத் தெரிய வருகிறது. அவைகளின் விவரம் பின் வருமாறு :—

1. கோயிலின் தென் சுவரிலும் வடமேற்குப் பகுதியிலும் உள்ளவை. சகம் 1422 துன்மதி ஆண்டு, விஜயநகரத்தரசன் - வீரப்பிரதாப புஜபலராய இம்மடிதம்மய்ய தேவ மகாராஜாவால் அளிக்கப்பட்ட சாசனக் குறிப்பு. இவன் சாளுவ நரசிங்கன் மகன் இம்மடி நரசிம்மன் என்று குறிக்கப்படுகிருன். இது ஓர் கிராமம் பெற்றதற்காக ஏற்பட்டது.

2. சகம் 1306 ரத்தாட்சி ஆண்டு. விஜய நகரத்தரசன் அரியண்ண உடையார் மகன் விருப்பண்ண உடையாரால் நிலதானம் அளிக்கப்பட்டது.

3. தேவராய மகாராயர் மகனுர் மல்லிகார்ச்சுன ராயரால் ஏற்பட்ட முடிவு பெருத கல்வெட்டு.

4. மண்டபத்தின் வடசுவரில் உள்ளவை. திரிபுவனச் சக்கரவர்த்தி. ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் II-ன் 8-ம் ஆண்டில் கிளியூர்வாசி ஒருவன் கோயிலுக்கு நிலம் கொடுத்

தது. இவ்வூர் பாண்டிய குலாசனி வளநாட்டின் ஓர் பகுதியாகச் சொல்லப்பட்டுள்ளது. (17-1-1285) புதன்கிழமை.

5. ஷை அரசன் காலத்தில் கோயிலில் விளக்கெரிக்க நிலம் அளிக்கப்பெற்றது.

6. ஹொய்சல அரசன் வீரராமநாத தேவனின் 13-ம் ஆண்டில் கோயிலுக்கு நெல் நன்கொடை கிடைத்தது.

7. சோழ அரசன் திரிபுவனச் சக்கரவர்த்தி. திரிபுவன வீரதேவனின் 32-வது ஆண்டில் (1178—1216) வலம்பக்குடி தில்லை திருநடப் பெருமாள் என்னும் விஜயாலய முத்தரையன் கோயிலுக்கு நிலதானம் செய்தது. இதில் கண்ட சோழன் மதுரை, ஈழம், கருவூர் ஆகிய இவ்வூர்களையும் பாண்டியன் முடியையும் கொண்டவன் என்று சொல்லப்படுகிறது.

8. ஷை அரசனின் 10-வது ஆண்டில் நிலதானம் ஏற்பட்டது. இது சிதைந்துள்ளது.

9. மண்டபத்தின் தென்சுவரில் சிதைந்து உள்ளவை. கரிகால சோழதேவனின் 6-வது ஆண்டில் பாண்டிய குலாசனி வளநாட்டைச் சேர்ந்த கள்ளிக்குடி கிராமவாசி நிலம் தானம் செய்தது.

10. நள ஆண்டு மகாமண்டலேஸ்வர ஆடம்பரங் கொண்டான் வல்லம் ராஜாவின் மகன் கம்பகதேவ மகாராஜா கடையக்குடி என்னும் கம்ப ராஜநல்லூர் கிராமத்தைத் தானம் செய்தது.

11. சோழ அரசன் திரிபுவனச் சக்கரவர்த்தி, திரிபுவன வீரதேவனின் 32-வது ஆண்டில் நிலதானம் கிடைத்தது.

12. திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரி மேக்கொண்டான் (கோன் நேர் இன்மை கொண்டான்) காலத்தில் பரகேசரி வர்மன் என்னும் விஜயாலய சோழதேவனின் ஒப்பந்தப்படி நிலதானம் கிடைத்தது.

13. விஜயநகர மன்னன் பூபதி உடையாரின் மகன் வீரநாராயண உடையார் காலத்தில் (சகம் 1334 நந்தன ஆண்டு) ஓர் கொத்தனுக்கு நிலமும், வீடும், மராமத்து செய்வதற்கு பாத்தியமுங் கொடுத்து அதன்படி அவன் தன் சொந்தச் செலவில் கோயிலை மராமத்து செய்தது.

14. சுந்தரபாண்டியனின் 11-வது ஆண்டில் (மகரம், பூர்வம், 6 புதன்கிழமை, ரோகணி நாள் 5-3-1264) தென் கரை ஜெயசிங்க குலாந்தக வளநாட்டைச் சேர்ந்த மைசெங்கிலி நாட்டுக் குடிகளால் நிலதானம் அளிக்கப்பெற்றது.

15. சண்டிகேஸ்வரர் கோயிலின் கீழ்சுவரில் சிதைந்து உள்ளவை. சோழமன்னன் திரிபுவனச் சக்கரவர்த்தி 3-ம் ராஜராஜதேவனின் 4-வது ஆண்டில் திருநெடுங்களம் என்னும் தியாகவல்லி சதுர்வேதி மங்கலசபையின் அங்கத்தினரால் நிலம் கிரயம் செய்தது.

16. ஷை அரசனின் 4-வது ஆண்டில் வலம்பக்குடி விஜயாலய முத்தரையனின் மகன் அனபாய முத்தரையன் என்பவன் கோயிலின் முதல் பிரகாரத்தில் தன் தந்தையாரின் ஞாபகார்த்தமாக ஓர் லிங்கம் ஸ்தாபித்து அதற்கு உலக நாதேஸ்வர உடையார் என்று பெயரிட்டது.

17. ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியனின் 3-ம் ஆண்டில் (ரிஷபம்-பூர்வம் 11 திங்கள், புஷ்யம் நாள்) ராஜேந்திரசோழவள நாட்டைச் சேர்ந்த அருவாளகூற்றத்தில் புது ஊரிலுள்ள அரையன் சிவந்த காலா லழகியன் என்பவன் கோயிலில் விளக்கெரிப்பதற்கு நிலம் தானம் செய்தது. (4-4-1278 திங்கள்கிழமை)

18. விநாயகர் கோயிலின் கீழ் சுவரிலுள்ளவை. இராஜகேசரி வர்மனின் 9-வது ஆண்டில் கோயிலின் மகாதேவருக்கு பஞ்சகவ்வியத்திற்கும், விளக்குகளுக்கும், தூபங்களுக்கும் 61 பசுக்கள் தானமளிக்கப் பெற்றது.

19. ஷை அரசனின் 6-வது ஆண்டில் ஓர் கிராமவாசி கோயிலில் லோகசுந்தரர் என்னும் சிலையைப் பிரதிஷ்டை செய்து பூஜைக்காக நிலமும் தானம் செய்தது.

20. ஷ அரசனின் 8-வது ஆண்டில் சூரத்தூர் கிராமவாசிக்கு இவ்வூர்க்குடிகள் நிலம் அளித்தது.

21. பரகேசரிவர்மனின் 14-ம் ஆண்டில் வடபுரையூர் நாட்டு செம்பியன் மூவேந்தவேளான் என்பவனின் நினைவுக்காக கோயிலின் அக்கினிக் காரியங்களுக்கு நெய்தானம் அளிக்கப்பெற்றது. இந்தச் செம்பியன் என்பவன் உத்தம சோழ பிரம்மாதி ராஜகன்மி என்ற பட்டப்பெயரைப் பெற்றிருந்ததாகத் தெரியவருகிறது.

22. இராஜராஜகேசரி வர்மன் முதலாம் ராஜராஜ சோழனின் 10-வது ஆண்டில் பிள்ளையார் கோயிலில் விளக்கெரிக்க இடையக்குடி குலம்பநாச்சாரால் பொன் தானம் அளிக்கப்பெற்றது. இவ்வரசன் காந்தளூர்ச் சாலையில் கப்பல்களை அழித்ததாகச் சொல்லப்படுகிறது.

23. ஷ அரசனின் 10-வது ஆண்டில் பூஜைக்காக 20 கலம் நெல்தானம் அளிக்கப்பெற்றது.

24. ஷ அரசனின் 9-வது ஆண்டில் மாசி, சித்திரை உற்சவ காலங்களில் 550 சிவயோகியர்க்கு உணவளிப்பதற்காக உறையூர் வாசி நிலம் தானம் செய்தது. இவ்வூர் விள நாட்டில் தேவதானமும், பிரம்மதேயமுமாயிருந்தது.

25. ஷ அரசனின் 8-வது ஆண்டில் கிராம சபையார் ஒருவனுக்கு நிலம் குத்தகைக்கு விட்டு கோயில் பூஜைக்காக 220 கலம் நெல் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தது.

26. ஷ அரசனின் 15-வது ஆண்டில் கோயிலில் விளக்கெரிக்க ஆடுகள் தானம் செய்யப்பெற்றது.

27. பரகேசரிவர்மனின் 13-வது ஆண்டில் கோயிலின் கயிலாயத்து மகாதேவனுடைய பூஜைகளுக்காக நெல் அளக்கும்படி ஓர் கிராமவாசி நிலம் தானம் செய்தது.

28. முதலாம் ராஜ ராஜ சோழனின் (ராஜராஜ கேசரிவர்மன்) 14-வது ஆண்டில் கம்பன்மணியன் என்னும் விக்ரமசிங்க மூவேந்த வேளான் என்பவன் கோயிலின் ஸ்ரீபலிக்காகப் பொன்னுபரணம் அளித்தது.

29. சோமாஸ்கந்தர் கோவிலின் தென் சுவரில் உள்ளவை. (சகம் 1386 சுபானு) குழந்தை நாயகர் வீற்றிருக்கும் கோவிலின் பூஜைக்காக முள்ளுக்குடி அரசனென்னும், வல்லாள தேவன் என்பவன் நிலமும், ஓர் வீடும் தானம் செய்ததுடன் கோயிலில் ரங்க மண்டபம் என்னும் மண்டபத்தையும் கட்டி வைத்தான்.

30. சகம் 1425 ருத்திரோத்காரி ஆண்டு. திருநெடுங்களமுடைய தம்பிரானர் அல்லது நிலத்தார் சோலைவனமுடைய நாயனர் கோயிலின் பூஜைகள், திருவிழா, மராமத்து முதலியவைகளுக்காக திருமலை ராஜா என்பவன் நிலம் தானம் செய்தது.

31. கோபுர வாசலின் வலது பக்கத்திலுள்ளது :— யானை வேட்டையில் விருப்பமுடையவனும், எல்லா நாடுகளிலிருந்தும், இலங்கையிலிருந்தும் கப்பம் பெற்றவனும் ஆன விஜய நகரத்தரசன் ஒருவனுடைய முடிவு பெருத சாசனம்.

32. வீரப்ப நாயக சமந்தனர் என்னும் அழகப்ப சமந்தனர் மகன் பெரிய எதிரிலா சமந்தனர் தம் தாயாரின் நினைவாக கோயிலின் பூஜைகளுக்குப் பணம் கொடுத்தது.

33. ஓர் மண்டபத்தின் துண்டுச் சுவரில் உள்ளவை. ராஜகேசரிவர்மன் காலத்திலும், மதுரைகொண்ட பரகேசரிவர்மன் முதலாம் பராந்தகன் காலத்திலும் கோயிலில் விளக்கெரிப்பதற்குப் பணம் கொடுக்கப் பெற்றது.

34. கிராமத்தின் ஓர் தெருவிலுள்ள கல்லில் உள்ளவை. விஜயரங்க சொக்கநாத நாயகர் (1705—31) (சகம் 1650 கலி 4829 - கீலக ஆண்டு) கோயிலின் பூஜைக்காக நிலம் தானம் செய்தது.

இக்கல்வெட்டுக்களின் செய்திகளிலிருந்து இத்தலம் மிகப் பழமையானதென்றும், தமிழரசர்களது காலத்தில் மிகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்கின

தென்றும், அக்காலங்களில் கோயிலுக்கு மிகுந்த வரு மானமும் சொத்துக்களும் இருந்தன என்றும், அர சர்கள் கோயில் காரியங்களைக் கண்ணுங் கருத்து மாகக் கவனித்து வந்தனர் என்றும், இவ்வூர் தியாக வல்லி சதுர்வேதிமங்கலம் என்று வழங்கி தேவதான மாக விளங்கி வந்ததென்றும், இவ்வூர்ப் பக்கங்கள் பாண்டிய குலாசனி வளநாடு, தென்கரை ஜயசிங்க குலாந்தக வளநாடு, ராஜேந்திர சோழ வளநாடு, என்று வழங்கப்பெற்று வந்ததென்றும், சுவாமிக்கு வெவ்வேறு பெயர்கள் வழங்கப்பெற்று வந்தனவென்றும் அறி கிறோம்.

## 12. தினப்பூஜையும், திருவிழாக்களும்

தினந்தோறும் காலை, உச்சி, மாலை, இரவு ஆகிய நான்கு காலங்களிலும், அபிடேக ஆராதனைகள் நிகழ்ந்து வருகின்றன. ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் 10 நாட்கள் வரையில் பிரம்மோற்சவம் நடைபெறுவது வழக்கம். ஆனால் சுமார் 35 வருட காலமாய் கோயி லின் வருமானக் குறைவால் பிரம்மோற்சவம் நடை பெறுவதில்லை. மற்ற மாதங்களில் நடைபெறவேண்டிய உற்சவங்கள் நிறைவேறி வருகின்றன. புரட்டாசி மாதத் தில் நவராத்திரி உற்சவமும், ஐப்பசியில் கந்தர் சஷ்டி உற்சவமும், அன்னாபிஷேகமும், கார்த்திகை மாதத்தில் சுடலையும், மார்கழியில் திருவாதிரை நட்சத்திரத்தில் நடராஜர் தரிசனமும், தைப்பூச விழாவும், மாசி மகத்தில் சுவாமி புறப்பாடும், பங்குனி உத்தர விழாவும் ஆண்டு தோறும் நடைபெற்று வருகின்றன. திருவிழாக் காலங் கள் இறைவன் மக்களுக்கு வலிந்து அருள் செய்வதற்

குரிய விசேஷ நாட்கள் ஆகும். ஒவ்வொரு விழாவும் இறைவனுடைய ஒவ்வொரு தன்மையை விளக்கும்.

## 13. வருமானமும், சொத்துக்களும்

தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த இனும் நவலூர் கிராமம் பூராவும் கோயிலைச் சேர்ந்தவை. அல்லாமல் திருச்சி ஜில்லா பொய்யக்குடி கிராமத்தில் 90 ஏகரும், அசூரில் 25 ஏகரும் திருநெடுங்களத்தில் 25 ஏகரும் நன்செய் நிலங்கள் உள்ளன. பளகனுங்குடியில் சுமார் 10 ஏகர் புன்செய் நிலம் உள்ளது. புத்தாம்புதூர் கிராமத்தில் புன்செய்க் காடுகள் உள்ளன. இவைகளையல்லாமல் திருநெடுங்களத்திலும், செட்டியார் பேட்டையிலும் சில தோப்புக்கள் உள்ளன. செவ்வையாக வசூலானால் ஆண்டுதோறும் சுமார் 1000 கலம் நெல் கிடைக்கும். ஆனால் தற்போது அவ்விதம் வசூலாவதில்லை. வாகனங்கள் யாவும் மரத்தால் செய்யப்பட்டவை. நல்ல திருவாபரணங்கள் இல்லை. கல்வெட்டுச் செய்திகளிலிருந்து இத்தலத்திற்கு மிகுந்த சொத்துக்கள் இருந்தனவாகத் தெரிகிறது.

## 14. நிர்வாகம்

இக்கோயிலின் நிர்வாகம் தனியே இருந்து வந்தது. 1939-ம் ஆண்டில் ஸ்கீம் ஏற்பட்டுச் சென்னை இந்துமத தர்ம பரிபாலன பாதுகாப்புப் போர்டின் நிர்வாகத்தில் சேர்ந்து கோயில் தர்மகர்த்தர்கள் கண்காணித்து வருகின்றார்கள். இவர்கள் கோயிலின் நலங் கருதித் தொண்டாற்றி வருகின்றார்கள்.

## 15. துதிப் பாடல்கள்

*(1) திருஞான சம்பந்த சுவாமிகள் பாடிய தேவா ரப் பதிகம். 11 செய்யுட்கள்.*

*மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றம்ஓராய் கொள்கையினல் உயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 1

*கனைத்தெழுந்த வெண்திரைசூழ் கடலிடை நஞ்சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்திய தேவநின்னை
மனத்தகத்தோர் பாடல்ஆடல் பேணியி ராப்பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 2

*நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத
என்னடியான் உயிரைவவ்வேல் என்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கும்
நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 3

*மலைபுரிந்த மன்னவன்தன் மகளையோர் பால்மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடை யாரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின் றாள்நிழற்கீழ்
நிலைபுரிந்தார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 4

*பாங்கிநல்லார் படிமஞ்செய்வார் பாரிட மும்பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழ லேவணங்கித்
தாங்கிநில்லா அன்பினொடுந் தலைவநின் தாள்நிழற்கீழ்
நீங்கிநில்லார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 5

*விருத்தனகிப் பாலனகி வேதமோர் நான்குணர்ந்து
கருத்தனகிக் கங்கையாளைக் கமழ்சடை மேற்கரந்தாய்
அருத்தனய ஆதிதேவன் அடியிணை யேபரவும்
திருத்தர்கீதர் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.* 6

கூறுகொண்டாய் மூன்றுமொன்றுக் கூட்டியோர் வெங்கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவ னேகொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெரு மானணிந்த
நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 7

குன்றின்உச்சி மேல்விளங்குங் கொடிமதில் சூழ்இலங்கை
அன்றிநின்ற அரக்கர்கோனை யருவரைக் கீழ்அடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியி ராப்பகலும்
நின்றுநைவார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 8

வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கிய நான்முகனும்
சூழவெங்கும் நேடஆங்கோர் சோதியு ளாகிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப் பொன்னடியின்
நீழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 9

வெஞ்சொல்தஞ்சொல் லாக்கிநின்ற வேடமி லாச்சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவ மொன்றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திர நின்அடியே
நெஞ்சில்வைப்பார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 10

நீடவல்ல வார்சடையான் மேய நெடுங்களத்தைச்
சேடர்வாழும் மாமறுகிற் சிரபுரக் கோன்நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம் பந்தன்சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே. 11

இப்பாடல்களில் இறைவனுடைய இயல்பும், அடியார்களின் இயல்பும், இறைவனை அழைக்கும் முறைகளும், அவர்கள் இறைவனை வழிபடவேண்டிய முறைகளும், அவர்களுக்கு இறைவன் அருள்செய்யும் முறையும். இறைவன் அவ்வப்போது அருள்செய்த வரலாறுகளும் பிற செய்திகளும் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அறிஞர்கள் தாம் பெற்ற இன்பம் பிறரும் அடைய விரும்புவர். அவ்வாறே ஞானசம்பந்தர், தமக்கு இறைவன் அருளியதுபோலவே மற்றை அடி

யார்களுடைய இடர்களையும் போக்கி அருளவேண்டும் என்று பதிகத்தில் பாடியுள்ளார். அடியார்கள் மனம் மொழி மெய்களால் இறைவனை வழிபடவேண்டுமென்றும், அவ்விதம் நடவாதவருக்கு இறைவன் அருளமாட்டான் என்றும் விளக்கமாகக் கூறியுள்ளார்.

பின் உள்ள வரிகளில் அடியார்களின் இடர்களை நீக்கவேண்டும் என்று ஞானசம்பந்தர் இறைவனை வேண்டுவது :—

'மறையுடையாய் தோலுடையாய் - பிஞ்ஞகனே' என்றுனைப் பேசினல்லால் குறையுடையார் குற்றம் ஓராய், நின்னை மனத்தகத்தோர் பாடல் ஆடல் பேணி இராப்பகலும் நினைத்தெழுவார் இடர்களையாய், பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர் சுமக்கும் நின் அடியார் இடர்களையாய், நின்ருள் நிழற்கீழ் நிலைபுரிந்தார் இடர்களையாய், நின்ருள் நிழற்கீழ் நீங்கி நில்லார் இடர்களையாய், அடியிணையே பரவும் நிருத்தர்கீதர் இடர்களையாய், வாய்மொழியால் ஏத்தி இராப்பகலும் நின்று நைவார் இடர்களையாய், கேடிலாப் பொன்னடியின் நீழல் வாழ்வார் இடர்களையாய், நின் அடியே நெஞ்சில் வைப்பார் இடர்களையாய், பெருமான் அளித்த நீறு கொண்டார் இடர்களையாய்.

இவ்வாறு ஒவ்வொரு பாடலிலும் அடியார்களின் துன்பத்தை நீக்கவேண்டுமென்று பாடியுள்ள முறைகளை மனதிற்கொண்டு இடர்கள் நீங்குதற்கு விரும்பும் யாவரும் இப்பாடல்களைப் பக்தியுடன் பயில்வது நலம்.

பதிகத்தில் வந்த இறைவனைப்பற்றிய பழைய வரலாறுகள் :—நஞ்சை மிடற்றில் வைத்தது. என் அடியான் உயிரை வவ்வேல் என்று அடல்கூற்று உதைத்தது, வார்சடையில் பிறைகொண்டது, கங்கையாளைச்

சடையில் கரந்தது, மலைபுரிந்த மகளை ஓர்பால் கொண்டது, தலைபுரிந்த பலி மகிழ்ந்தது, விருத்தனுகிப் பாலனுகியது, வெங்கணையால் மாறுகொண்டார் புரமெரித்தது, இலங்கை அரக்கர்கோனை அருவரைக்கீழ் அடர்த்தது. ஓர் சோதியுளாகி நின்றது, கேழல்வெண் கொம்பணிந்தது, மால்வேழ வெண்கொம்பு ஒசித்தது.

மேற்கண்ட வரிகளில் பல வரலாறுகள் அடங்கியுள்ளன. இவைகள் இறைவனுடைய தனித்தனிப் பண்புகளைக் குறிப்பாய்த் தெரிவிக்கும். இவ்வரலாறுகளையும் இவைகளின் உட்கருத்துக்களையும் விவரித்தால் தனி நூலாகுமாதலால் அன்பர்கள் இவைகளைப் பல நூல்கள் மூலமாயும் அறிஞர்கள் மூலமாயும் கண்டு கேட்டு அறிந்துகொள்க,

இறுதிப் பாட்டில இப்பதிகத்தைப் பக்தியுடன் பயில்வோர் பாவம் நீங்கப் பெறுவர் என்பதை 'ஞானசம்பந்தன் சொன்ன பாடல் பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே' என்று பாடியுள்ளார்.

(2) திருநாவுக்கரசு சுவாமிகள் இத்தலத்தைப்பற்றிப் பிற இடங்களில் பாடிய பாடல்கள்.

### புள்ளிருக்கு வேளூர்த் திருத்தாண்டகம்

ஆண்டானை யடியேனை யாளாக் கொண்டு
வடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை
நேமிவான் படையானீ ளுரவோ னாகங்
கீண்டானைக் கேதார மேவி னானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோ டென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே. 1

### க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்

கொடுங்கோளூ ரஞ்சைக் களஞ்செங் குன்றூர்
கொங்கணங் குன்றியூர் குரக்குக் காவும்
நெடுங்களம் நன்னிலம் நெல்லிக்காவும்
நின்றியூர் நீடூர் நியமநல்லூர்
இடும்பா வனமெழுமூர் ஏழூர் தோழூர்
எறும்பியூர் ஏராருமேம கூடங்
கடம்பை யிளங்கோயில் தன்னிலுள்ளுங்
கயிலாய நாதனையே காணலாமே. 2

## (3) அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்.

பஞ்சபுலனும் பழைய ரண்டுவினை யும்பிணிகள்
பஞ்செனவெ ரிந்து பொடி அங்கமாகிப்
பண்டறவுடன் பழைய தொண்டர்களுடன் பழகி
பஞ்சவர் வியன்பதியு டன்குலாவக்
குஞ்சரமு கன்குணமொ டந்தவனம் வந்துலவ
கொஞ்சிய சிலம்புகழல் விந்துநாதம்
கொஞ்சமயி லின்புரமெல் வந்தருளி யென்கவலை
கொன்றருள்நி றைந்த கழல் இன்றுதாராய்
எஞ்சியிடை யுஞ்சுழல அம்புவிழி யுஞ்சுழல
இன்பரச கொங்கைகர முங்கொளாமல்
எந்தவுடை சிந்தபெல மிஞ்சியமு தம்புரள
இந்துநுத லும்புரள கங்குல்மேகம்
அஞ்சுமள சம்புரள மென்குழைக ளும்புரள
அம்பொனுரு மங்கைமண முண்டபாலா
அன்பர்குல வுந்திருநெ டுங்களவ ளம்பதியு
லண்டரய னும்பரவு தம்பிரானே.

(4) ஐயடிகள் காடவர்கோன் நாயனுர் பாடியது.

## க்ஷேத்திரத் திருவெண்பா

தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணுது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்னுமுன் ஏழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாதம் நினை.

பதப்பிரிவு :—தொட்டு தடவி துடிப்பு ஒன்றும் காணுது பெட்ட பிணம் என்று பேர் இட்டு கட்டி எடுங்கள் அத்தா என்னு முன் ஏழை மடநெஞ்சே நெடுங்களத்தான் பாதம் நினை.

கருத்து :—' உடலைவிட்டு உயிர்நீங்குவதற்குமுன் நெஞ்சே நெடுங்களத்தான் திருவடிகளை நினைவாய் ' என்பது.

(5) நடுங்க உயிரை நமன்கொள்ளா முன்னம்
நெடுங்களத்தான் பாதநினை நெஞ்சே—படுகட்டம்
எல்லாம் பறந்தோடி இன்பம் உறச்செய்வான்
நல்ல துணையாவான் நாடு. (ஆசிரியர்)

(இத்தலத்தைப்பற்றிய வடமொழிப் புராணம் ஒன்று தஞ்சை சரஸ்வதி மஹாலில் இருப்பதாகச் சொல்லப் படுகிறது.)

வான்முகில் வழாதுபெய்க மலிவளஞ்சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்.

